# சொர்க்கபுரிச் சங்கதி

## (சிறுகதைகள்)

## எம்.எம்.நௌஷாத்




**தேசிய கலை இலக்கிய தேனகம்**

**சம்மாந்துறை**

**விலை : 750/=**

**சொர்க்கபுரிச் சங்கதி • சிறுகதைகள் • ஆசிரியர்: எம்.எம்.நௌஷாத்.@ எம்.எம்.நௌஷாத் • முதல் பதிப்பு: ஆகஸ்ட் 2016 • வெளியீடு: தேசிய கலை இலக்கிய தேனகம், சம்மாந்துறை • நூலட்டையும் ஓவியங்களும்: எஸ்.ருத்ரா • புத்தக வடிவமைப்பு : றிஸ்வி ஸெயின் • காப்புரிமை: ஆசிரியர் • அச்சுப் பதிப்பு: லீட் பிரிண்டர்ஸ், கொழும்பு—10. கிளை, சம்மாந்துறை. பக்கங்கள் : 440**

**Sorkkapurich Sangathi** (The Matters of Paradise) • Short Stories • Author :MM.Nowshad @ • MM.Nowshad • First Edition : August 2016 • Publisher :Thesiya Kalai Ilekkikiya Thenakam, Sammanthurai • Cover Art and Drawings :S.Ruthra•Book Layout: Rizvi Zain • Copy Rights : Author • Printed By: Leed Printers, Colombo-10. Branch – Sammanthurai. • Pages : 440

Rs. 750/-

**ISBN978-955-3966-00-1**

# சமர்ப்பணம்

அன்பு பாசம் அறிவு ஆற்றல் ஆளுமை
அத்தனையும் ஒருங்கே ஒளிர வழிகாட்டிய

மறைந்த என் அருமைத் தந்தை
ஓய்வு பெற்ற அதிபரான
மர்ஹூம் யூ.எம்.முஸ்தபா அவர்களுக்கும்

இன்றும் என்னை ஆசீர்வதிக்கும்
ஓய்வு பெற்ற ஆசிரியையான
என் அன்னை திருமதி ஜெமீலா முஸ்தபா அவர்களுக்கும்

என் இன்பத்தையும் துன்பத்தையும்
எக்கணமும் பகிர்ந்து கொள்ளும்
என் மனைவி ஏ.எல்.தைஹிபா அவர்களுக்கும்

# எங்கிருந்தோ வந்த நான்

**எம்.எம்.நௌஷாத்**

எனக்கு நவீன இலக்கியங்களில் பரிச்சயம் கிடையாது. குறிப்பிடத் தக்க கலாநண்பர்கள் இல்லை; இலக்கியக் கோட்பாடுகள் எதுவும் தெரியாது; இப்போது எந்தப்புள்ளியில் நிற்கிறேன் என்ற அறிவுகூட பூச்சியமே. சொல்லப்போனால் சுத்த சூனியம் என்று சொல்வார்களே அப்படி. ஆனாலும் என்னுடைய சிறுகதைகள் தொகுதியாக வரவேண் டும் என்று என்னை நெருக்கிய நண்பர்களுக்கு இதோ 'சொர்க்கபுரிச் சங்கதி' என்ற என்னுடைய அறுவடையைத் தந்திருக்கிறேன்

நான் எழுதத் தொடங்கி சரியாக 35 வருடங்கள், தொகுதி 10 வருட முயற்சி; கொஞ்சம் பழைய தமிழ்தான் பொறுத்துக் கொள்க! கண்ணாடியோ, வைரமோ தெரியாது; கதை சொல்வதாக நினைத்து வளவளா என்று கதையளந்து விட்டேனோ அதுவும் தெரியாது; விளைச்சல் பதராகி விட்டதோ என்றுகூட நெஞ்சுக்குள் ஒரு நெருடல். எப்படி இருந்தபோதிலும் சின்ன வயதிலிருந்தே கதை சொல்லுவ தென்றால் எனக்கு ஆசை. அந்த அதீத ஆசை காரணமாக விக்ரமாதித்தன் காலத்து ஆள் போலாகி வேதாளக் கதை சொல்லி விட்டேனோ என்று உங்களைப்போல் நானும் சில வேளை நினைப்பதுண்டு. தீர்ப்பை உங்களிடமே விட்டுவிடுகின்றேன்.

நீங்களெல்லாம் எதிர்பார்க்கும் நிறைய விஷயங்கள் என் சிறுகதைக ளில் இல்லை. உணர்வுகளைக் கதையாக்குவது, மண், நவீன நடை, கதை எதுவுமில்லாத கதை. நாளாந்தநடப்பு என்று இவைகள் எழுதக் கூடாது என்றல்ல. எனக்கு எழுத வராது. இங்கேயுள்ள கதைகள் கனவுலகத்துக்குப் போய் என் இஷ்டத்துக்கு எழுதப்பட்டவை, எனவே சிறுகதைகளே அல்ல நான் எழுதியவை என்று என்னைப் பார்த்து நீங்கள் சொன்னாலும் நான் கோபிக்கப் போவதும் இல்லை.

இவ்வேளை மறைந்த என் தந்தையை நினைத்துக் கொள்கிறேன். அவரைச் சபையில் இருத்தி இத்தொகுதியை வெளியிட வேண்டுமென்று எனக்கு கனவு இருந்தது. நான் நான்காம் வகுப்பு கற்கும்போது டொமினிக் ஜீவாவின் மல்லிகையை அவர் வாசிக்கத் தந்தார்; தண்ணீரும், கண்ணீரும் வாசிக்கத் தந்தார்; அவர் ஒரு சிறந்த தமிழ் ஆசிரியர்; எழுதியுமிருக்கிறார்.
1980 களில் க.பொ.த. சாதாரணதரப் பரீட்சை எழுதிய கையேடு நான் அனுப்பிய சிறுகதைக்கு முதல் பரிசு கிடைத்தது. தலைப்பு

‘வெளிச்சத்திற்கு வருவோம்’, போட்டி நடத்திய நிறுவனம் நீர்ப்பாசனத் திணைக்கள தமிழ் பண்பாட்டுக் கழகம், பரிசு பெற்ற புளகாங்கிதத்தில் நிறைய எழுதித் தள்ளினேன். யாரோ மிக வேகமாக எழுதும் எழுத்தாளர் என்று புகழ்ந்தது கூட ஞாபகம். ஒரு நாளில் கதை எழுதி முடித்து விடுவேன். திருத்தங்கள், வெட்டல், ஒட்டல், செப்பனிடுதல் எதுவும் கிடையாது. தபாலிடும் பொறுப்பை என் நண்பன் எம். எச். அமானுல்லா ஏற்றுக் கொண்டார்.

உயர்தரம் எழுதிவிட்டு எழுதாமலேயே இருந்த கால கட்டமும், பல்கலைக்கழகம் சென்ற கால கட்டமும் என் கதைகளை மீளாய்வு செய்யக் கிடைத்த அரிய சந்தர்ப்பமாகும். வாசித்துப் பார்த்த பொழுது வேகமாக எழுதினாலும் கதைகளில் வீச்சோ, கனதியோ கிடையாது என்பதோடு அவை ஒன்றுமே உருப்படியான சிறுகதைகள் அல்ல என்ற முடிவுக்கு வந்தேன். அதனால்தான் மறைந்த வீ ஆனந்தன் அவர்களும் மற்றைய நலன் விரும்பிகளும் சிறுகதைத் தொகுதி போடுவோமா என்று கேட்டபோது சிறுகதைகளா வாசிக்கவே வெட்கமாக இருக்கிறது என்று மறுத்துவிட்டேன்.

ஓர் அண்ணளவான பின்னூட்டலைப் பெற்றுக் கொள்வதற்காக என்னுடைய கதைகளை நெருங்கிய நண்பர்களுக்குக் கொடுத் தேன். என் பிள்ளைகளும் வாசித்தார்கள். வாசித்து முடிந்த பின் எல்லோரும் ஒருமித்துச் சொன்ன அபிப்பிராயங்களின் சாராம்சம் இதுதான்.

கதைகள் நன்றாக இருக்கின்றன. ஆனால் அவை யதார்த்தமற்ற கதைகள்; கற்பனைச்சம்பவங்கள் உண்மைக்குப் புறம்பான உரை யாடல்கள்; எங்குமே கேள்விப்பட்டிராத புதுமைப்பாத்தி ரங்கள். எனவே இவைகள் உண்மையில் சிறுகதைகள் தானா? என்று உள்ளந்திறந்து கேட்ட அத்தனை உள்ளங்களுக்கும் நன்றி!.

சாதாரண வாசகர்களுக்கே இப்படித் தோற்றும் போது திறனாய் வாளர்கள் என்ன செய்வார்கள்? காத்திரமான விமர்சகர்களுக்கு என் கதைகள் கசக்கத்தான் செய்யும். மனச்சாட்சியுடன் விமர் சனம் எழுதக்கூட பின்னடிக்கக் கூடும்.

அவர்கள் சொன்ன அத்தனை விஷயங்களும் உண்மையே. 1980 களிலிருந்து ஓரளவேனும் யதார்த்தமான கதைகளை எழுதி வந்த எனக்கு 2005 இலே விபரீத புத்தி உண்டாயிற்று அதுவே இந்த பிறழ்வுக்குக் காரணமும் ஆயிற்று.

காலத்தை வென்று நிலைத்து நிற்கும் தேவதைக் கதைகள் குறித்து நான் வியப்புறறேன். இந்தக் கதைகளிலே ஏதேனும்

நீதிப் போதனை பொதிந்திருந்தாலும் யதார்த்தம் பெரிதாக இருக்காது. யுதார்த்தமில்லாத இக்கதைகள் கடல் கடந்தும் எல்லைகளைக் கடந்தும் ஈர்த்து உயிர் வாழ்கின்றன. இக்கதை கள் உள்ளங்களை மனோவசியப் படுத்துவதற்கு முக்கிய காரணம் கதைகளில் பொதிந்திருக்கும்'மாயக் கற்பனை' ஆகும். எனக்கேற்பட்ட விபரீதப் புத்தி என்ன வென்றால் வளர்ந்தோருக் கான தேவதைக் கதைகள் எழுத முடியுமா என்ற சிந்தனைதான். அதற்காக நீதிப் போதனைகளை மையப்படுத்திய பிரசாரக் கதைகளை எழுத முடியாது என்ற காரணத்தால் வளர்ந்தோருக் கான பின்புலத்தில் எழுதப்பட்ட கதைகள்தான் பெரும்பாலாக இத்தொகுதியில் அடங்கி இருக்கின்றன. அதனாற்றான் அதீத கற்பனையில் சுற்றிச் சுழன்று அவை யதார்த்த உலகை விட்டு எங்கெல்லாமோ போய்விட்டன.

இந்த நியாயங்களையெல்லாம் நான் சொல்லுவது என்னுடைய கதைகளை சிறுகதைகளாக ஏற்றுக்கொண்டு என்னையும் ஒரு சிறுகதை எழுத்தாளனாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்பதற்காக அல்ல. ஏனெனில் எந்த அளவுகோலைக் கொண்டும் தற்காலச் சிறுகதையாசிரியர்கள் வரிசையில் என்னைச் சேர்த்துக் கொள்ள எந்தக் கற்பிதங்களும் கிடையாது.

இரண்டு கதைகள் தவிர மற்றைய கதைகளை நீங்கள் இப்போது தான் வாசிக்கப் போகிறீர்கள். எல்லாம் புதியவை. எதிலுமே வெளி வராதவை. என்னைப்பற்றி என்ன பிம்பம் நீங்கள் வைத்திருக்கிறீர் களோ தெரியாது. ஆனால் இவைகளைத்தான் அதிகபட்சமாக என்னால் வெளிக்கொணர முடிந்துள்ளது. உங்களிடம் ஒரேயொரு விருப்பத்தை முன்வைக்கிறேன். வாசியுங்கள், வாசியுங்கள் மீண்டும் மீண்டும் என் கதைகளை வாசியுங்கள், நிறைய விமர்சியுங்கள். ஏனெனில் குப்பைமேடாக இருந்தாலும் எங்கோ மூலையில் ஒரு குண்டுமணி இருக்கலாம். இல்லாவிட்டாலும் குப்பையைச் சுத்தப்படுத்திய புண்ணியமாவது உங்களுக்குக் கிடைக்கும்.

இவ்வேளை தம்பெறுமதியான நேரத்தை அர்ப்பணித்து என் கதைகள் தொடர்பான கருத்துக்களை வழங்கிய பேராசிரியர் றமீஸ் அப்துல்லாஹ், கலாநிதி க.இரகுபரன், உமா வரதராஜன், மன்சூர் ஏ.காதிர் ஆகியோருக்கும் ஓவியர் சீ.ருத்ராவுக்கும், வெளியீட்டகத் திற்கும் என் இதய பூர்வமான நன்றிகளை நவில்கிறேன்.

**62, பிலாவடி லேன், சம்மாந்துறை.**
mmnowshad@gmail.com
facebook.com / nowshad2015
2016 ஆகஸ்ட்

# நவீன தமிழ்ச் சிறுகதையின் இளவரசன்

**பேராசிரியர் றமீஸ் அப்துல்லாஹ்**

இந்தச் 'சொர்க்கபுரிச் சங்கதி' கிடைத்து மூன்று மாதங்களுக்கு மேலாகி இருக்க வேண்டும். இந்த அணிந்துரையை எழுதுவதற்காகப் பலதடவை முயன்று தோற்று இருக்கிறேன். எல்லாச் சங்கதிகளையும் எழுத வேண்டுமென்றால் அது மிகக் கஷ்டமான பணியாகத்தான் இருக்கும். இந்தக் கதாசிரியருக்கும் எனக்கும் நீண்ட தொடர்பு இருக்கிறது. அந்தத் தொடர்புகளுக்கும் இந்த அணிந்துரைக்கும் கூடத் தொடர்பிருக்கிறது.

அசானியா ஏ பாவா, சுபைதா அமீர், மன்சூர் ஏ காதிர், அப்துல்லாஹ் சேர், என். வடிவேல் இவர்கள் எல்லாம் என் பள்ளிக் காலத்துத் தமிழ் ஆசிரியர்கள். பல்கலைக்கழகத்திற்கு வெளியே எனக்குத் திறனாய்வைக் கற்பித்தவர்கள் மூவர். ஒருவர் டாக்டர் முருகேசப்பிள்ளை மற்றவர் வீ. ஆனந்தன் இன்னும் ஒருவர்தான் இந்தக் கதைகளின் ஆசிரியர் டாக்டர் நௌஷாட்.

1990களில் பேராதனைப் பல்கலைக்கழகத்தில் நான் மாணவனாக இருந்த காலத்தில் இடம்பெற்ற 'திறனாய்வு மாலை'யில் கே. கணேஷினால் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்ட சீன நாவலான 'கூனற் பிறை'யைத் திறனாய்வு செய்யக் கேட்டிருந்தனர். அப்போது எனக்கு இத்துறையில் போதிய அனுபவம் இருக்கவில்லை. எனது தந்தையின் ஆலோசனைப்படி டாக்டர் நௌஷாட்டிடம் இது பற்றிக் கலந்துரையாடினேன். திறனாய்வு நுட்பங்களோடு அவர் எனக்கு அதை எழுதியே தந்தார். என்னுடைய உரையைக் கேட்ட பலர் என்னைப் பாராட்டினர். அந்தப் பாராட்டில் நௌஷாட்டுக்குப் பெரும்பங்கிருக்கிறது. இத்தகைய ஆற்றல் நிறைந்தவர்தான் டாக்டர் நௌஷாட்.

1980களில் சம்மாந்துறையில் இருந்து சிறுகதைத் துறைக்குப் பங்காற்றியவர்களில் எம்.எம். நௌஷாட் குறிப்பிடத்தக்கவர். இவரது முதற்கதை 'வெளிச்சத்திற்கு வருவோம்' என்பது. இது 'சுடர்' என்ற சஞ்சிகையில் வெளியானது. கதை சொல்லும் முறையில் புதுமையைக் கையாளும் இவர் அப்போது இலட்சியபூர்வமான கதைகள் எழுதுவதிலே அதிகம் அக்கறை காட்டினர். சமூகப் பிரச்சினைகளையும் அவருடைய சில கதைகள் தத்ரூபமாக எடுத்துக் காட்டின. தினகரன், வீரகேசரி வார இதழ்களிலும் மல்லிகை, சுடர்

போன்ற சஞ்சிகைகளிலும் எழுதிய இவர் பின்னர் எழுதுவதை நிறுத்திக் கொண்டார்.

எழுத்துலகில் நின்றும் காணாமல் போன அவர் சுமார் 35 வருடங்களுக்குப் பின்னர் 'சொர்க்கபுரிச் சங்கதி'களோடு வந்திருக் கிறார். அவர் சொர்க்கத்திலிருந்து கொண்டு வந்திருக்கின்ற சங்கதிகள் இந்தக் காலத்தின் எழுத்துலகில் பெரிதும் விமர்சனத்திற்கு உட்படலாம். நவீன கவிதைகளைக் கூட காலாவதியாகி விட்டது என்று சொல்கிற உலகம் இது. 'பழைய தமிழில் வளவளா என்று கதை அளந்து விட்டேனா தெரியாதென்றும் விக்கிரமாதித்தன் காலத்து ஆள் போலாகி வேதாளக் கதை சொல்லி விட்டேனோ' என்றும் நௌஷாட் தன் கதைகளைப் பற்றிக் கூறுகிறார்.

நாங்கள் நினைக்கின்ற நிறைய விசயங்கள் இக்கதைகளில் இல்லையென்றும் உணர்வுகளின் கதையாக, மண்ணின் கதையாக, நவீன நடையாக, கதையில்லாத கதையாக எதுவும் இவற்றில் இல்லை என்கிறார். கனவுலகில் நின்று எழுதிய கதைகள் என்றும் சொல்லுகிறார். இந்த இடத்திலிருந்து தான் நௌஷாட்டோடு நான் முரண்பட விரும்புகிறேன். சில வேளைகளில் இந்த அணிந்துரையை முழுமையாக வாசித்து முடிந்த பின்னரும் அதேநேரம் நான் இதற்கு இட்டிருக்கிற தலைப்புக் குறித்தும் என்னோடு முரண்பட வேறு சிலர் வரவும் கூடும். எப்படியிருந்தாலும் தமிழ்ச் சிறுகதையில் வியக்கத் தக்க ஒரு புதுவரவு நௌஷாட் உடையது என்று கூறுவதற்கு நான் தயங்கவில்லை.

எஸ்.எல்.எம். ஹனீபாவின் 'அவளும் ஒரு பாற்கடல்' என்ற கதைக்கு முன்னுரை எழுதிய பேராசிரியர் கா. சிவத்தம்பி "ஒட்டு மொத்தத் தமிழ்ச் சிறுகதைத் துறையின், புதுமைப்பித்தனுக்குப் பின்னர் வரும் பங்களிப்பாளர்களில் ஒருவராகக் கொள்ளல் வேண்டும்" என்று குறிப்பிடுகின்றார். இந்தக் கருத்தினை நான் வாசிக் கிறபோது இப்படி அழுத்தமாகப் பேராசிரியர் குறிப்பிடுவது குறித்துச் சற்று யோசித்திருக்கிறேன். நௌஷாட்டின் கதைகளை வாசித்தபோது சிவத்தம்பி, எஸ்.எல்.எம். ஹனீபாவைப் பற்றிக் குறிப்பிட்டதுபோல நௌஷாட்டைக் குறிப்பிட வேண்டும்போல் உள்ளது. அந்தளவுக்கு வீச்சுடன் எழுதுகிற சிறுகதையாளர்கள் சிலராவது நம்முள் இருக்கிறார்கள் என்பதுதான் மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறது.

ஈழத்தின் சிறுகதை வரலாற்றில் ரஞ்சகுமாரையும் உமா வரதராஜனையும் ஒரு காலகட்டம் என்று குறிப்பிடுவதுபோல தமிழ்ச் சிறுகதை வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயமாக நௌஷாட்டின் கதைகளைப் பார்க்க வேண்டும். நௌஷாட்டின் கதைகளின் தலைப்பு களைப் பார்க்கிறபோதும் அந்தக் கதை மாந்தர்களின் பெயர்களைப்

பார்க்கிறபோதும் அந்தக் கதைகளின் தொடக்கத்தினையும் முடிவினை யும் பார்க்கிறபோதும் இவை சொர்க்கபுரிச் சங்கதிகள்தான் என்ற முடிவிற்கு வரவேண்டி இருக்கிறது. ஆனால், அந்தக் கதைகளுக் குள்ளே அளவளாவுகிற விசயம் நமக்கும் நமது வாழ்வுக்கும் மிகமிக நெருக்கமானவை. ஒருசில கதைகளைத் தவிர பெரும் பாலான கதைகள் சாதாரண மனிதர்களுக்கு ஏற்படாத பிரச்சினை யாக இருந்தாலும் தத்துவார்த்தம் நிறைந்த மனிதர்களில் பலர் தினமும் எதிர்கொள்கின்ற பிரச்சினைகளாகும். இவற்றை மிக அற்புதமாக ஒரு சிற்பி போல, ஒரு சித்திரக்காரன் போல நௌஷாட் சித்திரித்துள்ளார்.

நௌஷாட். ஒரு வைத்தியர். நேரடியாக வைத்தியத் துறையோடு சார்ந்த சில கதைகள் இத்தொகுதியில் உள. ஒரு வைத்தியன் தனக்குள்ளே தனது சமூகப் பிரச்சினைகளை நோக் குகின்ற விதம் போலமைந்த பார்வையோடுதான் அவருடைய பெரும்பாலான கதைகள் அமைந்துள்ளது என்பது எனது வாதம். நாம் சமூகத்தில் எதிர்நோக்குகின்ற பல்வகையான பிரச்சினைகளை அவர் தனது கதைகளுக்குள் சிறைப்படுத்தியுள்ளார். பெரும்பாலான விடயங்கள் மற்றவர்கள் தங்களது கதைகளுக்குள் கொண்டுவராத பிரச்சினைகளாகவே உள்ளன. ஆனால், அவை அனைத்தும் அன் றாடம் நாம் காண்கின்ற, சந்திக்கின்ற பிரச்சினைகளாக உள்ளன. இவ்வகையிலே அவரது சிறுகதைகளை நாம் விரிவாக நோக்க முடியும்.

‘அதிதுடிஇமை குணாம்சம்’ என்ற கதை மருத்துவத் துறையின் அடிப்படையான ஒரு விடயத்தை எடுத்துக்காட்டுகிறது. இந்தக் கதையை வாசிக்கின்ற ஒரு வாசகன் மிக இலகுவாக மருத்துவத் துறையைப் பற்றி அறிந்துகொள்ள முடிகிறது. மருத்துவத்தில் டயக்னோசிஸ் என்பது எவ்வளவு முக்கியமானது என்பதை விபரிப்பதாகவே அந்தக் கதை அமைகிறது. ‘அரை வைத்தியன் ஆயிரம் பேரைக் கொன்றான்’ என்பார்கள் இதுபோல நோய்த் திருஸ்டாந்தத்தை அறியாத வைத்தியரைப் பார்த்து அவரது பேராசிரியர் சொல்கிற செய்தி “ஒன்று சொல்கிறேன் நீ சரியான டாக்டர் கிடையாது. நோயாளி மரணித்துவிட்டால் நீயும் தற்கொலை செய்து கொள்வதுதான் நல்லது” என்பதாக இந்தக் கதை முடிகிறது.

நம்மில் பெரும்பாலானோர் அனுபவிக்கிற மரணத்திற்கு மிக நெருக்கமாக நம்மைக் கொண்டு செல்லுகின்ற நோய்கள் எல்லாம் நம் மனதின் அவஸ்தைகளின் பிரதிபலிப்பாக வருவதை மிக அற்புதமாக அவருடைய ‘நோயாளியும் பஞ்சு மிட்டாயும்’ என்ற கதை எடுத்துச் சொல்கிறது. நோயினால் அவதிப்படுகின்ற ஒரு முதியவர் எல்லா வைத்திய சோதனைகளுக்குப் பின்னரும் தன்

இளமைக்கால வளர்ப்பு மகனை எண்ணியே நோய்வாய்ப்பட்டிருக்கிற செய்தியை மிக அற்புதமாக இக்கதை படம் பிடித்துக் காட்டுகின்றது. இவை இரண்டும் நேரடியாக வைத்தியத் துறையோடு சம்பந்தப்படு கின்ற மிக நல்ல கதைகள். 'ஒரு பற்குச்சி சமாச்சாரம்' என்ற கதை பல்வலியின் அனுபவத்தை மிகக் கலைத்துவமாக வெளிப்படுத்து கிறது. 'தலையிடியும் காய்ச்சலும் தனக்கு வந்தால்தான் தெரியும்' என்பார்கள் அதேபோன்று பல்வலியின் அனுபவம் ஒருவருக்கு வந்தால்தான் தெரியும். அந்த அனுபவமே இங்கு கதையாகி இருக்கிறது.

'அரசனும் அரசனும் நிறுவனம்' என்ற கதை கணவன் - மனைவிக்கிடையில் இருக்கின்ற மொழி ரீதியான அந்தஸ்தின் முரண்பாடு பற்றியும் நிறுவனங்களின் நேர்முகப் பரீட்சைகளில் இருக்கின்ற போலித் தன்மையையும் மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றது. சொர்க்கபுரிச் சங்கதியாயினும் இவையெல்லாம் இன்று நமக்கிடையிலே - நம் இளைஞர்கள் அனுபவிக்கின்ற பல்வேறு தொழில் ரீதியான பிரச்சினைகளைக் கொண்டுள்ள கதைகள். இக் கதைகளின் உள்ளடக்கமும் சித்திரிப்பும் மிக முக்கியமானவை நௌஷாட்டின் கதைகளோடு ஒன்றிப்பதற்கு மிக நல்ல பொறுமை வேண்டும். உண்மையில் நல்ல படைப்பினை விளங்கிக் கொள்வதற்கு ஒரு சீரியசான மனோநிலை அவசியப்படுகிறது. இந்த மனோநிலை இருக்கின்றவர்களாலேயே நௌஷாட்டின் கதைகளை விளங்கிக் கொள்ள முடியும் என்பது எனது அபிப்பிராயம். பொதுவாக அது ஒரு தேர்ந்த வாசகனுக்குரிய பண்பும் ஒரு நல்ல இலக்கியத்திற்குரிய பண்புமாகும்.

'அன்டிலோப்பின் நளினநடை' ஒரு சிங்கத்தின் கதையாக இருந்தாலும் மனித நடத்தையை – மனித சமூகத்தின் தந்திரோபாய மான வாழ்வைச் சித்திரிக்கின்ற கதையாகவும் கொள்ள முடியும். மிகப் பலமுள்ள சிங்கம் தான் சுதந்திரமாக வாழ விரும்பியும்கூட, அது முடியாதுபோய் தன் பற்களையும் தன் அட்டகாசமான குரலொலியையும் இழந்து போகின்ற செய்தியைச் சொல்கின்ற கதையாகும். 'எலும்புக்கூடு சித்தாந்தம்' ஒரு கிராமத்தில் வாழ்கின்ற பெரிய அந்தஸ்தில் உள்ள சிலர் புதையல் தேடிப் புறப்படுகிற கதையை எடுத்துச் சொல்வதன்மூலம் மனித சமூகத்தின் பேராசையை இக்கதை புலப்படுத்துகிறது. இக்கதையைச் சொல்ல வருகிற கதாசிரியர் குடும்பங்களில் அன்றாட வாழ்க்கையில் எதிர் நோக்குகிற பிரச்சினைகளினூடே கதையை நகர்த்துகின்றார். குறிப்பாகப் பிள்ளைகளின் பாடசாலை வாழ்க்கை, அது தொடர்பாகக் கணவன் - மனைவிக்கிடையே ஏற்படுகிற பிரச்சினை மேலும் காசு

அட்டைகளின் செல்வாக்கும் இக்கதையில் வருகிறது. இவ்வகையான கதைகளைக் கதாசிரியர் சித்திரிக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

‘கசாப்புக் கடைக்காரனும் கணிதப் பேராசியரும் தத்து வஞானியும்’ ஒன்றாக ஓரிடத்தில் வாழ்வது மிகக் கஷ்டமான விசயம். சமூகத்தில் இப்படியான ஒன்றிப்பு நடந்து விடுவது தவிர்க்க முடியாத இம்மூவரும் பிரிந்து வாழ எண்ணியபோதும் இம்மூவரின் பிரச்சினை களையும் மிக அற்புதமாக இந்தக் கதை பதிவு செய்திருக்கிறது. பேராசிரியர்களின் வாழ்வில் நடந்து விடுகிற போலியை இக்கதை வெளிப்படுத்துகிறது. உண்மையாக அவர்கள் ஒவ்வொருவரினதும் இயல்புகளை இக்கதையின் மூலம் கதாசிரியர் படம் பிடித்துக் காட்டுகிறார். ‘கடிகாரம் களவுபோயிற்று’ என்ற கதை களவின்மூலம் தண்டிக்கப்படுகிற அப்பாவிகளைப் பற்றியது. இச்செய்தியினைச் சொல்ல வருவதற்கு இக்கதையினை அவர் வளர்த்துச் செல்கிறவிதம் வியப்புக்குரியது. களவு போய்த் தேடப்பட்ட கடிகாரம் பொலிஸ் அதிகாரியின் பைக்குள்ளேயே இருந்து எடுக்கப் பட்டவுடன் தான் அதற்கான காரணத்தை ‘‘திமிர்பிடித்த பணக்காரக் கிறுக்கன் சாதாரண கடிகாரத்திற்காக இப்படி ஊரைக் கூட்டி டம்பமடிக்க வேண்டிய அவசியமில்லை. பொலிஸ்காரர்களாகிய நாங்கள் பணக்காரர்களின் பேராசைகளுக்குச் சிலவேளைகளில் பாடம் கற்பிக்கவும் வேண்டி இருக்கிறது என்று அமைதியாகச் சொன்னார்’’ பொலிஸ் அதிகாரி லிபோசு. இவ்வாறான கதைகள் சமூகத்திலுள்ள போலித்தனமானவர்களின் வாழ்க்கையினைச் சித்திரிப்பதாக அமைந்துள்ளன.

‘தீர்க்கதரிசியின் புதிய முகவரி’ என்ற கதை தீர்க்கதரிசியின் சீடன் ஒருவன் தீர்க்கதரிசியாகப் போகின்ற ஒரு நல்ல கதை. புதிய தீர்க்கதரிசியின் பொதுசனத் தொடர்பு அதிகாரியாகப் பழைய தீர்க்கதரிசி மாறுகின்றான். இந்த உலகின் போலித்தனம் இந்தக் கதையினூடே வெளிப்படுகிறது. இந்தக் கதையில் வருகின்ற (**PRO)** பொதுசனத் தொடர்பு அதிகாரி ஒரு முக்கியமான பாத்திரமாக அமைகிறது. அரசியல்வாதிகளுக்குப் பின்னால் இருப்பவர்களைக் குறிப்பிட்டுச் சொல்வது போலவும் இந்தப் பாத்திரத்தின் தன்மை அமைந்துள்ளது. ‘மெர்ஸலீனாவுக்கு மோட்சம்’ என்ற கதை மிக சுவாரஸ்யமான கதையாயினும் சீரியசாகப் பார்க்க வேண்டிய மிக நல்ல கதை. சமூகத்தின் பல தரப்பினர்களையும் இக் கதை சாடு கிறது. பாவத்தை விட்டு ஒதுங்குவதற்கு இடமளிக்காத சமூகத்தை மிக அற்புதமாக விபரித்துள்ளார் கதாசிரியர். உண்மையில் மிக நல்ல கலைச்சித்திரிப்பாக இக்கதை அமைந்துள்ளது.

'நாகபாம்பு மனைவி' சந்தேகத்தோடு வாழ்ந்து போகிற கணவன் - மனைவியின் வாழ்வை எடுத்துக் காட்டுகிறது. மனைவி யோடு மிக நெருக்கமாக வாழ்கின்ற கணவன் தனது சந்தேகத்தின் காரணமாகத் தனது மனைவியையே இழந்து விடுகிற நிலைக்கு ஆளாகிறான். 'நிழலைப் பிடிக்க ஓடுகிறேன்' என்பதும் அவ்வாறே உள நோயியல் பேராசிரியர் ஒருவர் தன் மனைவியை நம்ப முடியாது வாழ்க்கையை வாழத் தெரியாது, வாழ்வை இழந்து விடுகிற கதையாகிறது. 'திருமதி பூச்சியியலாளன்' என்ற கதையும் பூச்சியோடு சம்பந்தப்பட்டிருக்கிற கணவன் தன் மனைவியை இழந்து விடுகிறான். மொத்தத்தில் இக்கதைகள் அனைத்தும் படித்த சமுகத்தில் உள்ளவர்களின் வாழ்க்கை தொலைந்து போவதை வெளிப்படுத்துகின்ற நல்ல கதைகள். இந்த மாதிரியான அனுபவங் களைக் கதையாக்குவது நமது சாதாரணமான கதையாசிரியர்களிடம் இல்லாத பண்பு. இந்த அனுபவங்கள் அத்தனையும் ஒரு வைத்தியனாக இருந்து சமூகத்தை வழிநடத்த முனைகிற ஒரு எழுத்தாளராக நௌஷாட் தன்னைப் பிரகடனப் படுத்துவது போல் இருக்கிறது.

வாழ்க்கையில் பெரும்பாலானவர்கள் காலம் கடந்து செல்வதையும் வாழ்க்கை தொலைந்து செல்வதையும் எண்ணி எண்ணி அலுத்துப் போவதும் உண்டு. இவர்களின் உளநிலையில் இது ஒரு முக்கியமான பிரச்சினையாக இருக்கிறது. இந்த உளநிலை யிலிருந்து விடுதலை பெறுவதற்குக் 'காலத்தைத் தொலைத்தவர்கள் செல்லும் இடம்' என்ற கதை நன்கு உதவுகிறது. படிப்பினை பெற்ற பயணி, 'நான் இன்னமும் காலத்தைத் தொலைக்கவில்லை, பேரூந் திலிருந்தபோது நிறைய விசயங்களைக் கற்றுக்கொண்டேன், என்னால் வாழ்க்கையை எதிர்கொள்ள முடியும் நான் வாழப் போகிறேன், முடியுமானால் சொல். உன்னைத் திருமணம் முடிக்கவும் நான் தயாராக இருக்கிறேன். உனக்கு விருப்பமா?' என்பதுடன் இக்கதை முடிகிறது. இப்படிப் பெரும்பாலான கதைகள் மூலம் ஒரு மனிதனுக்குள் ஏற்படுகிற வித்தியாசமான சிந்தனைகளுக்குப் பதிலளிக்கிற கதாசிரியர் பாராட்டப்படக் கூடியவர்.

குழந்தைகளின் உலகம் மிக வித்தியாசமானது. பிள்ளை களால் பெற்றோர்களுக்குப் பல பிரச்சினைகள் ஏற்படுகின்றன. தாயையும் தந்தையையும் பரீட்சிக்கிற ஒரு முக்கியமான களமாக இக்கதை இருக்கிறது. நவீன காலத்தில் குழந்தைகள் எதிர்கொள் கின்ற பிரச்சினைகள் மிக வித்தியாசமானவை. அவற்றைக் கையாள் கின்ற விதத்தினைக் 'சின்ன மனிதர்கள் வாழும் தீவு' என்ற கதை எடுத்துக்காட்டுகின்றது. 'மரப்பாச்சியின் செல்லக் குழந்தை' குழந்தை களுக்கான பொழுதுபோக்கிடங்கள் உருவாக்கப்படுகிற வரலாற்றைச்

சொல்வதுபோல வெளிநாட்டவர்கள் இவ்விடயங்களில் அக்கறை காட்டுவதனை எடுத்துக்காட்டுகின்றதாக அமைந்துள்ளது. உண்மை யில் அன்பை எதிர்பார்க்கின்ற வெளிநாட்டவர்கள் நமது குழந்தை களிடம் ஏமாந்து போகிற செய்தியை மிக அற்புதமாக இக்கதையில் ஆசிரியர் கொண்டு வந்திருக்கிறார். அதேநேரம் சுவாரஸ்யமாகவும் இக்கதையினை எடுத்துக் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

மேலும், நம் பெரும்பாலான கதையாசிரியர்கள் எழுதுகிற காதல் கதைகளும் நௌஷாட்டிற்குக் கை கூடியிருக்கின்றன. ஆனால், இவரது காதல் கதை மிக வித்தியாசமானது, எதிர்பாராதது. வகை மாதிரிக்கு அவர் எழுதிய 'அழகு என்பதற்கான நிறமூர்த்த ஒழுங்கு' பற்றிய கதையைக் குறிப்பிட வேண்டும். நாம் இதுவரை வாசித்த எல்லாக் காதல் கதைகளையும் விட இது நமக்கு மிக நெருக்கமாக – ஒரு காதல் அவஸ்தையின் ஒட்டுமொத்தமான பரிமாணத்தையும் வெளிப்படுத்துவதாக அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது. உண்மையான காதல் எப்படியும் வாழும் என்பதற்கு இக்கதை நல்ல உதாரணமாகிறது. சிறுகதைகளை விட வைரமுத்து வின் பல காதற் பாடல்கள் நமக்குள்ளே பல சோகத்தினை ஏற்படுத்தி இருக்கின்றன. அவற்றையெல்லாம் மிஞ்சி இந்தக் காதல் கதை அமைந்திருப்பது மகிழ்ச்சி தருகிறது.

"ஒரு கணமும் என்னால் அவளைப் பிரிந்திருக்க முடியாது என்பதால் பாடசாலை இறுதி மணி அடித்ததும் நானும் பாஸ்மாவுடன் பஸ்ஸில் ஏறிவிடுவேன். பாஸ்மாவின் வீட்டுக்கு அடையாளம், வீட்டு முற்றத்திலே வலது மூலையிலே நின்ற நாவல் மரம். நாவல் மரத்திலே முக்கோண வடிவத்திலே மூன்று கிளைகள். முதற் கிளை கிளைத்து இரண்டு கிளைகளாக இருந்தன. இரண்டாம் கிளை கிளைத்து மூன்று கிளைகளாக இருந்தன. மூன்றாம் கிளை கிளைத்து நான்கு கிளைகளாக இருந்தன. அவற்றில் இரண்டு பட்டுப்போன கிளைகள். மூன்று அணில்கள் அங்கு வந்து போகும். இவற்றில் ஒன்று கொழுத்த அணில். இருந்தாற்போல் ஒரு கபில மர அணில் வந்து போகும். தினசரி அங்கு வந்து போகும் பறவைகளின் மொத்த எண்ணிக்கை இருபத்திரண்டு தொடக்கம் இருபத்தைந்து. முன்பக்க கேற்று பன்னிரெண்டு அடி அகலமானது. கேற்று கம்பிக்கிராதியால் செய்யப்பட்டிருந்தது. கேற்றிலே நாற்பத்தியெட்டு நெடுங்கம்பிகள் இருந்தன. குறுக்குக் கம்பிகள் ஆறு. மையத்திலே கம்பியிலேயே வடிவமைக்கப்பட்ட பதின்மூன்று சூரியகாந்திப் பூக்கள். கேற்றின் நிறம் ஒரேஞ்ச். வர்ணம் பூசப்பட்டுச் சரியாக மூன்று வருடங்களும் ஏழு நாட்களும்."

இப்படிப் பதிந்த அந்தக் காதலின் பதிவுகள் கதையின் இறுதிவரை மிக அற்புதமாகக் கலைத்துவத்தோடு பின்னப்பட்

டிருக்கிறது. கடைசிவரை வாசிப்பதற்கான ஆசையைத் தூண்டுகிற மிக நல்ல கதை இது.

இத்தொகுதியிலுள்ள மிக நல்ல கதைகளில் இன்னும் ஒன்றே 'இருபதாம் நூற்றாண்டுக் கணவன்மார்கள்' என்பது ஆச்சரியமான தலைப்பு. பல கதையாசிரியர்கள் சீதனம், மாமியார்களின் தொல்லை முதலான விடயங்களைக் கையாண்டு பல கதைகளை எழுதி யுள்ளனர். போதாக்குறைக்கு நமது தென்னிந்திய தொலைக் காட்சி நாடகங்கள் தருகிற அனுபவங்கள் அதிகம். ஆனால், இந்த விவகாரத்தை நௌஷாட் மிக அற்புதமாகக் கலையாக்கியுள்ளார். அந்தக் கதையினை அவர் நகர்த்தியுள்ள விதம், அவர் அதனை எடுத்துரைக்கின்ற பாங்கு மிக வித்தியாசமானதும் புதியதுமாகும். பெண் பார்க்கப் போகின்ற படலத்திலிருந்து பெண்ணை நேர்முகம் காணல், அவளது வங்கிக் கணக்குப் பற்றிய விபரங்கள், அஸித்ராவை முனிவரிடம் அழைத்துச் செல்வது வரை அக்கதை அற்புதமாகவே உள்ளது. சொத்துக்கள் முதல் அத்தனையும் ஆகி இருக்கின்ற அஸித்ரா – மணப்பெண் அன்புக்காக ஏங்குவதுதான் இக்கதை. இதன் எதிர்பாராத முடிவு இக்கதையை இன்னும் கனமாக்கி இருக்கிறது. கோட்பாடுகளுக்கு அப்பால் பெண்ணின் நிலையில் நின்று இக்கதையை ஆசிரியர் நகர்த்தியிருப்பது கவனிக் கத்தக்கது.

'காணாமல் போகக் கடவாய்!' 'அகாலமாகக் காணாமல் போன, முகம் தெரியாத அத்துணை ஆன்மாக்களுக்கும் இக்கதை சமர்ப்பணம்' என்று ஆசிரியர் குறிப்பிட்டிருக்கிறார். ஒரு காலகட் டத்தில் நமது நாட்டிலிருந்த போராட்ட சூழ்நிலையை இக்கதை கச்சிதமாகப் பதிவு செய்திருக்கிறது. அத்தனை கொலையையும் செய்த படைவீரன் ஒருவனின் உளநிலை இந்தக் கதையில் சித்திரிக்கப்படுகிறது. அப்பாவித்தனமான கணவனை இழந்த பெண்ணொருத்தி அந்தப் படைவீரனைச் சந்திக்கிறாள். அவன் அத்தனை கொலைகளையும் செய்துவிட்டுத் தற்கொலைக்குத் தயாராகிறான். எல்லாக் கொலைகளையும் செய்து விட்டு அவன் தற்கொலை செய்வதற்குத் தயாராகுவதைப் பார்த்த அந்த அப்பாவியின் மனைவி 'ஐயா நீங்கள் தற்கொலை செய்து கொள்ளத் தான் வேண்டுமா?' என்று கேட்கிறாள். இதனோடு அந்தக் கதை முடிந்துவிடுகிறது.

உண்மையில் காணாமல் போனவர்களின் கதையும் அந்தக் குடும்பங்களைச் சேர்ந்தவர்களின் மனோநிலையும் இத்தனை கொலைகளையும் செய்தவன் செத்தால் என்ன? வாழ்ந்தால் என்ன? என்று நினைக்கின்ற அந்தப் பெண்ணின் உளநிலையும் இக்கதை

மூலம் வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இன்றைய சமகால அரசியலில் மிக முக்கியத்துவம் பெற்றிருக்கின்ற காணாமல் போனவர்களின் பிரச்சினையைக் கதையாக்கி இருப்பது மிகுந்த கவனத்திற்குரியது. இந்தக் 'கதை'க்கு இருக்கின்ற அரசியல் முக்கியத்துவம் அதிக விமர்சனத்திற்குரியது.

'1989', 'மரண பீதியும் அச்சவியலும்', 'திறப்பின் மீள் வருகை' என்ற மூன்று கதைகளும் உண்மையில் ஒரே கதையே. இந்நாட்டின் இன சங்காரத்தை இக்கதைகள் வெளிப்படுத்துகின்றன. பெற்றோர்களுக்குக் கனவுப் பொதியாக இருக்கிற பிள்ளைகள் இந்தப் போராட்ட சூழ்நிலையில் அர்த்தமற்றுப் போகிற செய்தியை மிக அற்புதமாகத் 'திறப்பின் மீள் வருகை' எடுத்துக் காட்டுகிறது. காணாமல் போகிற சிறுவன் போராளிகளால் கடத்தப்பட்டு அர்த்த மற்றுப் போகிற வாழ்க்கையை இக்கதை எடுத்துக் காட்டுகிறது.

'இரு வீடுகள் உள்ள கிராமம்' என்ற கதை மத ரீதியான இரு சமூகங்களின் வேறுபாட்டையும் குரோதங்களையும் எடுத்துச் சொல்வதன் மூலம் பல்லினச் சமூகங்களுடன் வாழ்கிற இலங்கைச் சமூகம் எதிர்நோக்குகின்ற பிரச்சினைகள் போன்ற ஒரு பிரதிமையை இக்கதை செய்கிறது. 'ஞவர்களும் ஙவர்களும்' என்பதுவும் நௌஷாட்டின் கற்பனைக்கு உதாரணமான ஒரு கதை. இக்கதையில் இன ரீதியான பகை உணர்வு விபரிக்கப்படுகிறது. 'ஞ' என்ற இனத்துக்கும் 'ங' என்ற இனத்துக்கும் இடையில் மனிதாபிமான மனப்பாங்கு கேள்விக் குறியாவதை நௌஷாட் இக்கதையில் சித்திரித்துள்ளார்.

'உன் பெயர் என்ன' என்ற கதை கலாசாரத்தை எடுப்பார் கைப்பிள்ளை போல் வீசியெறிய முடியாத சமூகத்தைப் பற்றிக் கூறுகிறது. கலாசாரத்தை இழந்து அகதியாகப் போகின்றவனின் கதை இது. சிப்பாய்களுக்கும் அகதிகளுக்குமான வாழ்வு இக்கதையிலே எடுத்துரைக்கப்படுகிறது. அகதியின் பெயரே கதையின் சுவாரசியத்தை அதிகரித்து இருக்கிறது. 'பேயோட்டி' 'காக முண்டமாகி' 'தங்கக் கட்டியாவது' 'உன் பெயர் என்ன' என்ற கதையில் புலப்படுகிறது. இறுதியில் அகதியான 'பேயோட்டி தங்கக் கட்டி'யாகி விடுகிறான். மொத்தத்தில் இக்கதைகள் அனைத்துமே எழுப்புகின்ற அரசியல் அதிர்வு மிகக் கூர்ந்து பார்க்கத்தக்கது.

மருத்துவ ரீதியான பிரச்சினைகள் முதல் பிள்ளைகள், பெற்றோர்கள், சமூக அங்கத்தவர்கள், படித்த வர்க்கத்தினர்களின் பிரச்சினைகள் எனவும் காதல் அழுத்தங்கள், பெண்ணிலைப்பட்ட

பிரச்சினைகள், சமூக விமர்சனங்கள் எனவும் இந்த நாட்டின் புரையோடிப் போயிருக்கின்ற இன ரீதியான பிரச்சினைகளின் வெவ்வேறு வடிவங்கள் எனவும் நௌஷாட்டின் கதைகளில் பல விடயங்கள் வந்து சேர்ந்திருக்கின்றன. இவற்றில் எந்தக் கதைகளின் சுருக்கத்தையும் சொல்லி அவரது கதைகள் பற்றிய அபிப்பிராயத்தை உங்களுக்கு ஏற்படுத்திவிட முடியாது. அவரது ஒவ்வொரு கதைகளும் மிக அற்புதமாகக் கலையாக ஆக்கப்பட்டிருக்கிறது. அதனை ஒவ்வொரு சொல்லாக உள்வாங்க வேண்டிய தேவை நமக்கிருக்கிறது. அவரது கதைகளில் ஊடறுத்துச் செல்லும் அங்கதமும் கேலியும் கிண்டலும் அவற்றினை மிகக் கவனிப்பிற்கு உள்ளாக்கியுள்ளது. நிச்சயமாகத் தமிழ்ச் சிறுகதை மன்னன் புதுமைப்பித்தன் என்றால் அதன் ஒரு இளவரசனாக நான் நௌஷாட்டை அடையாளப்படுத்த விரும்புகிறேன்.

மொத்தத்தில் எதிர்பாராத கதையின் தலைப்புக்கள், எந்த முன்னுதாரணமுமற்ற கதைப்போக்கு, கதையின் தொடக்கம், கதையின் வளர்ச்சி, பாத்திரங்களின் பெயர்கள், முடிவு முதலான வற்றைக் கொண்டு மிக அற்புதமான ஒரு கதைத் தொகுதியை நௌஷாட் தந்திருக்கிறார். தமிழ்ச் சிறுகதை வளர்ச்சியில் ஒரு திருப்புமுனையாக நான் இக்கதைத் தொகுதியைக் கொள்ள விரும்புகிறேன். மிக வித்தியாசமான கலைத்துவங்கள் கொண்ட ‘சொர்க்கபுரிச் சங்கதி’யைத் தந்த நௌஷாட் நம் பாராட்டிற்கு உரியவர். அவர் இன்னும் ஆக்கபூர்வமான கலைப்படைப்புக்களை நமக்குத் தரவேண்டும். நமக்குள் எழுகின்ற தத்துவ விசாரங் களுக்கும் குடும்பச் சிக்கல்களுக்கும் நல்ல பதில் தருகின்ற ஒரு உளவளத் துணையாளராக நின்ற ஒரு கதாசிரியராக அவரைப் பார்க்க முடிகிறது. அவர் இன்னும் நமக்குப் பயனுள்ள கதைகளைத் தரவேண்டும். அவரது கலைச்சேவை மிகப் பெறுமதி வாய்ந்ததாக அமைய எமது வாழ்த்துக்கள்!

**தலைவர், மொழித்துறை,**
**தென்கிழக்குப் பல்கலைக்கழகம்,**
**ஒலுவில்.**

# நௌஷாத்தும், அதிசயப் பேனாவும்

**உமாவரதராஜன்**

'பத்து வருடங்களுக்கு முன்னர் வந்திருக்க வேண்டிய தொகுப்பு இது' என்ற நண்பர் நௌஷாத்தின் குறிப்பைப் படிக்க நேர்ந்தபோது என்னால் மேலும் இது இன்னொரு வருடமாக நீடிக்கப் போகிறதோ என்று உள்ளூரக் கலக்கமடைந்தேன். நௌஷாத் அவர்கள் எழுத்தாளர் மட்டுமல்ல, ஒரு வைத்தியரும்கூட. அவரைப்பற்றி புகழ்ந்துரைக்கா விட்டாலும்கூட விஷஊசி செலுத்தி என்னைக் கொன்று விடுமளவுக்கு அபாயகரமானவர் அல்ல என்பதால் கதைகள் பற்றி சில வரிகள் எழுத மகிழ்ச்சியுடன் ஒத்துக் கொண்டேன்.

முன்னுரைகள் என்பது நமது இலக்கிய உலகில் சம்பிரதாயங்களில் ஒன்றாக மாறி வெகுநாட்களாகிவிட்டன. 'நடத்தை நற்சான்றிதழ் களுக்கும், இவற்றுக்கும் பெரிய வித்தியாசம் இல்லை. படைப்புக்களின் உண்மையான முகத்தைத் தரிசிக்க சுயமான நம்முடைய வாசிப்பைத் தவிரவே வேறெதுவும் கைகொடுக்காது. தாங்கள் கனவிலும் நினைத்திராத 'சிதம்பரரகசியத்தை' விமர்சகர் களும், முன்னுரையாளர்களும் திரைவிலக்கிக் காண்பிக்கும் போது அந்தப் படைப்பாளிகளே ஆச்சரியத்தில் வாய் பிளந்திருப்பார்கள். நீளம் பாய்வதுபோல் முன்னுரைகளைத் தாண்டிக் கடந்து படைப்புக்களை வாசித்துவிட்டு கடைசியாகவோ அல்லது நமக்குப் பிடித்த தொலைக்காட்சி நிகழ்ச்சிகளின் நடுவே ஒலிபரப்பாகும் விளம்பர நேரங்களின் போதோ முன்னுரைப்பக்கம் பார்வையைச் செலுத்தவது ஒன்றும் இலக்கியக் குற்றமாகாது. நமது முன்னுரை யாளர்களுக்குத்தான் எவ்வளவு வேலைப்பளு! அப்பனைப் பாடிய அதே வாயால் குப்பனைப் போற்றணேண்டும். சுப்பன் கோபிப்பான் என்பதால் அவனையும் புகழ வேண்டும். இவ்வாறு மிகவும் சுறுசுறுப்பாக நம் முன்னுரை உலகம் இயங்கிக் கொண்டிருக்கின்றது.

நௌஷாத்தை நான் முதன்முதலில் சந்தித்து 30 வருடங்கள் ஆகி இருக்கும். மறைந்துபோன நண்பன் ஆனந்தன் செய்த நல்ல பல காரியங்களில் இதுவும் ஒன்று. ஒரு செடியின் குண விசேஷம் அறிய அதில் பூக்கும் ஆயிரம் பூக்கள் அவசியமில்லை. கையெழுத்துப் பிரதி வடிவில் நௌஷாத்தின் ஒரு கதையைப் படித்த மாத்திரத்தில் அவரை அடையாளம் கண்டுகொண்டேன். நான் அப்போது வெளியிட்டுக் கொண்டிருந்த 'வியூகத்தில்' அவருடைய சிறுகதையை மகிழ்ச்சியுடன் பிரசுரித்தேன்.

தென்கிழக்குப் பல்கலைக்கழகத்தின் மொழித்துறை ஒழுங்கு செய்திருந்த அனுபவப் பகிர்வு நிகழ்வொன்றில் அவரை நீண்ட காலத்திற்குப் பிறகு சந்தித்தேன். நிகழ்வில் படைப்பாளிகளின் சுய அறிமுகத்தின்போது 'நான் நௌஷாத்' என அவர் கூறியபோதே வியப்புடன் அவரை அடையாளம் கண்டேன். இருவருக்கும் அருகருகான ஊர்கள் - ஓரளவு அருகருகான வயது - ஆனாலும் இடைவெளி என்ற திரை விழுந்த மாயத்தைப் பற்றி யோசித்து, பெருமூச்செறிந்தேன். வைத்தியர்களுக்கே உரிய மிகக் குறைவான பேச்சு அபூர்வமாக முகத்தில் மின்னி மறையும் புன்னகை. (அவர் இரண்டாயிம் பேர்களைக் கொன்று முழு வைத்தியராகி விட்டாரா என்று எனக்குத் தெரியாது அன்றைய சந்திப்பின் இறுதியில் ''அண்மையில் ஏதாவது எழுதினீர்களா?'' என்று கேட்டேன். ''கதைகளின் தொகுதி ஒன்றை வெளிக்கொணரலாம் என்றிருக்கிறேன்'' என்றார். ''வெளியீட்டு நிகழ்வுக்கு என்னை ஒரு பார்யைாளனாக மறக்காமல் அழைத்து விடுங்கள்'' என்றேன். ''உங்களை அழைக்காமலா?'' அழைப்பை எதிர்பார்த்திருந்த எனக்கு அரசாங்க வர்த்தமானி அளவில் 'பைண்ட்' செய்யப்பட்டிருந்த கதைகளின் தட்டச்சுப் பிரதியையே நண்பர் றமீஸ் அப்துல்லா மூலம் நௌஷாத் அனுப்பி வைத்துவிட்டார்.

கிடைத்த நாளிலிருந்து 'ஒரு நாளைக்கு ஒரு வரி' என்ற ரீதியில் வாசித்திருந்தாலும்கூட மொத்தக் கதைகளையும் படித்து முடித்துவிட்டு குறிப்புக்களை எழுதி முடித்துவிட்டு அடுத்த முன்னுரையை எழுதப் போயிருக்கலாம். ஆனால் என்னைப் போன்ற ஓர் எழுத்தாளனுக்கு வாழ்க்கையில்தான் எவ்வளவு சோதனைகள், நெருக்கடிகள்? எனக்குப் பிடித்தவற்றை உண்ண வேண்டும் என்பதால் நானே சந்தைக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. மின்சார, தண்ணீர், தொலைபேசிக் கட்டணங்களை மாதாமாதம் உரிய வேளையில் சென்று நானே செலுத்தவேண்டி இருக்கிறது. என்முகத்தை நானே மறந்துவிடாமல் இருக்க முகநூலில் அடிக்கடி என் படங்களைப் பதிவேற்றம் செய்ய வேண்டி இருக்கிறது. முற்பிறப்பில் நான் செய்த பெருந்தவத்தின் பயனாக முகநூலில் எனக்கு நண்பர்களாக வாய்த்த அனேகம்பேர் கவிஞர்கள். அவர்கள் எந்தத் தகரத்தை வைத்துத் தட்டினாலும் சங்கீதம் என்று சொல்லுமளவுக்கு என் செவிகளின் உணர்வுத்திறன் மாற்றமடைந்து விட்டது. கவிதாயினிகளின் பேராதரவும் தேவையென்பதால் அவர்களுடைய தனங்களும், கவிதைகளும் சுமாரானவையாக இருந்தாலும் 'அதிஅற்புதம்' என்று இரண்டு சொற்களில் பின்னூட்டமிட்டு அந்தப் 'பந்தையக் குதிரைகளைக்' குஷிப் படுத்துவதும் காலத்தின் கட்டாயமாகிப் போய்விட்டது. இத்தகைய 'கடமை நெருக்கடிகளுக்கு' மத்தியில் திணறிக் கொண்டிருக்கும்

போதுதான் டொக்டர் நௌஷாத்தின் அளப்பரிய சாதனை வியப்பில் ஆழ்த்துகிறது. எவ்வளவு நோயாளிகள், எவ்வளவு மேலதிகாரிகள், எவ்வளவு சிற்றூழியர்கள், எவ்வளவு மருந்து வகைகள், வீடு, வெளி இவற்றுக்கு மத்தியில் டொக்டர் அநாயாசமாக, சிறப்பாக இவ்வளவு கதைகளையும் எழுதிவிட்டு கமுக்கமாக இருந்திருக்கிறார். நான் கண்ட ஈழத்துக் கதாசிரியர்கள் பலரும் தங்கள் கதைகள் பேசியதைவிட தாங்கள் உரத்த தொனியில் பேசியது அதிகம். ‘இது சுத்தமான நெய்யினால் தயாரிக்கப்பட்ட பலகாரம்’ என்றோ, ‘‘இது சதுரமான வடிவில் சுடப்பட்ட தோசை’’ என்றோ சமையற் கட்டில் இருந்து அவர்கள் கூவுவதைப் போல் இருக்கும். ஆனால் மாறாக நௌஷாத் அடக்கமாகவும், மௌனத்துடனும் இருக்க அவருடைய கதைகளோ ஆச்சரியமான அதிர்வுகளை உண்டாக்கிச் செல்லுகின்றன.

சிறுகதைகள் பற்றிய வரையறைகள் இன்று மிகவும் மாறிவிட்டன. சிறுகதையில் ஒரு மையம் இருக்க வேண்டும். அசத்தலான ஆரம்பம், சுவாரஸ்யமான வளர்ச்சி, குறுகிய கால நிகழ்வு, குறைந்த பாத்திரங்கள், எதிர்பாராத முடிவு போன்றவற்றை சிறுகதையின் லட்சணங்கள் என்று வேண்டுமானால் வகுப்பறைகளிலும், சிறுகதைப் பயிலரங்குகளிலும் சொல்லிக் கொண்டிருக்கலாம். ஆனால் ஏனைய கலை - இலக்கிய வடிவங்களைப்போல் ‘இன்றைய சிறுகதையிலும்’ உருவம், உள்ளடக்கம் சார்ந்து ஏராளமான மாற்றங்கள் வந்து விட்டன. நாம் கண்டுகொள்ள மறந்தாலும், புரிந்துகொள்ள சிரமப்பட் டாலும் மாமூலான வடிவங்களை மீறியும், மையங்களை நிராகரித்தும் கதை என்ற அம்சத்தை நீக்கம்செய்தும் இன்றைய சிறுகதைகள் எழுதப்பட்டுக் கொண்டிருக்கின்றன என்பதுதான் உண்மை.

வெறும் ஒற்றையும், தட்டையுமான எழுத்தைப் படித்து சலித்துப்போன தீவிர வாசகன் ஒருவனுக்கு புதிர்த் தன்மையும், பல்பரிமான புரிதல்களையும் கொண்ட இத்தகைய கதைகள் பெரும் வசீகரத்தைத் தருகின்றன.

வழமைபோல் இவற்றையெல்லாம் பெரும்பாலான நம் எழுத்தாளர் களும், பத்திரிகைகளும், கல்விக் கூடங்களும் அறிந்து கொள்ள விரும்புவதில்லை. நம்முடைய ஞாயிற்றுக்கிழமை வாரப்பத் திரிகைக் கதைகளை மாத்திரம் நம்பிக் கொண்டிருந்தால் இந்த மாற்றங்கள் ஒருபோதும் நமக்கும் புலப்படாமல் போய்விடக் கூடும்.

மொத்தமாக 33 சிறுகதைகள். இந்தக் கதைகளை மாமூலான வகைக்குள் அடக்கி விடவோ வழக்கமான முறையில் வாசித்துக் கடக்கவோ முடிவதில்லை. விசித்திரமான அந்தப் புனைவுலகுக்குள் நுழைய அற்புத விளக்கு எதுவும் தேவையில்லை. அவருடைய

அபரிதமான கற்பனை தடத்தைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தால் அதுவே போதுமானது. அது எங்கெங்கோ நம்மைக் கொண்டு செல்லுகின்றது. அவர் கதை சொல்லும் பாணி அலாதியானது. அமைதியான, ஆர்ப்பாட்டம் இல்லாத கடல்போல் அது வெளிப் பார்வைக்குத் தோன்றினாலும் உண்மையிலேயே அதன் அடியாழத்தில் ஓடிக் கொண்டிருக்கும் சூட்சும நீரோட்டம் வேறொன்றாக இருக்கின்றது.

யுக்ஸியி, ஜுவன், மிகா, ரிகா, ஸிகா, பாப்லு, பாஸ்மா போன்ற நமக்கு அந்நியமான பெயர்கள்; நாம் முன்பின் கேள்விப்பட்டிராத ஊர்கள், நாடுகள். சிங்கமும், அன்டிலோப் என்ற பறவையும் மனிதர்களின் தந்திரக்குணம் பற்றி ஆற்றாமையுடன் உரையாடுகின்றன. இரண்டு சிறகுகள் வெளிப்படும் ஒரு கடிகாரம் வருகின்றது. சாதாரண சைக்கிள் ஒன்றைக் கூட செலுத்த இயலாத ஒருவன் பேரூந்தை ஓட்டும் சூழ்நிலை வருகின்றது. புதையல் தேடிச்சென்று எலும்புக் கூடாகின்றார்கள். இவையெல்லாம் ஒரு விநோத உலகத்தின் காட்சிகள்போல் நம்மை மருட்டுவது ஒரு தோற்ற மயக்கமே தவிர வேறில்லை. நம் கை அருகிலும், கால் அடியிலும் உள்ள உலகத்தின் காட்சிகளே அவை என்பதைப் புரிந்து கொள்வது அவ்வளவு சிரமமானதல்ல. அனுபவங்களை அப்படியே 'கடைவிரித்துப் பரப்பும்' ஒரு கலைஞராக நான் நௌஷாத்தைக் காணவில்லை. அவருடைய அபூர்வமான, அங்கதம் நிரம்பிய கதை சொல்லும் திறன் அனுபவத்தை மடைமாற்றும் வித்தையைத் திறம்படச் செய்கின்றது. மேலோட்டமான பார்வையில் பாட்டி சொன்ன மாயாலோகக் கதைகள் போலவும், அபரிமிதமான கற்பனைகள் நிறைந்த நீதிக் கதைகள் மாதிரியும் இவை தோன்றக்கூடும். ஆனால் ஆழ்ந்த, நுணுக்கமான வாசிப்பில் இக்கதைகளின் பரிமாணங்களைக் கண்டறிய முடியும். வல்லரசுகளின் குப்பைக் கூடைகளாக, விளையாட்டு மைதானங்களாக, சந்தைகளாக மாற்றப்பட்ட 'மெலிந்த நாடுகள்', மனிதனின் அளவற்ற ஆசை, டாம்பீகம், பாசாங்கு, வறட்டு கௌரவம், தங்கள் இனங்களின் பெயரிலான பிரிவினைகள், மூட நம்பிக்கைகள், அதிகாரங்களின் ஒடுக்குமுறை, அதன் விளைவாக எழும் குற்றவுணர்வு, பழைமைவாதத்தை எள்ளி நகையாடல் போன்ற அம்சங்கள் சூட்சுமமான முறையில், கலையழகுடன் இந்தக் கதைகளில் வெளிப்படுகின்றன.

ஈழத்து இலக்கிய சூழலில் நௌஷாத்துக்கு முன்மாதிரியான ஒரு எழுத்தாளரை என்னால் சுட்டிக் காட்ட இயலவில்லை. பரந்த உலக ஞானம், செழுமையான சுவாரஸ்யமான மொழிநடை, அங்கதம், அனுபவமும், அபரிமிதமான கற்பனையும் சமாந்தரமாகப் பயணிக்கின்றமை, சமூகப் பார்வை என்பவை ஒரு படைப்பாளியிடம்

ஒருங்கிணைந்து குவிவது வெகு அபூர்வம். நௌஷாத்துக்கு அது கைகூடியிருக்கிறது. இந்த வகையில் அவர் ஒரு முக்கியமான, தனித்துவமான சிறுகதை ஆசிரியராகத் தேறுகிறார்.

மனதை நெகிழவைக்கக் கூடிய ஓர் அருமையான காதல்கதை இந்தத் தொகுப்பில் உண்டு. அதன் தலைப்பு ‘அழகு என்பதற்கான நிறமூர்த்த ஒழுங்கு’. இந்தத் தொகுப்பில் எனக்கு மிகவும் பிடித்த ஏனைய கதைகள்: அதிதுடி இமை குணாம்சம், அன்டிலோப்பின் நளினநடை, இரு வீடுகள் உள்ள ஒரு கிராமம், எலும்புக்கூடு சித்தாந்தம், கடிகாரம் களவு போயிற்று, ‘இருபதாம் நூற்றாண்டுக் கணவன்மார்கள், காணாமற் போகக் கடவாய், சொர்க்க மயானத்திலே நாட்டுப்புறத்தான், தீர்க்கதரிசியின் புதிய முகவரி, நாகபாம்பு மனைவி, கசாப்புக் கடையில் புல்புல் பறவை.

நௌஷாத்தின் இந்தத் தொகுப்பு எனக்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. வாசகர்களும் நிச்சயம் மகிழ்ச்சியடைவார்கள். நல்வாழ்த்துகள்.

**பாண்டிருப்பு,**
**கல்முனை.**

# முன்னுரைக் குறிப்புகள்

**கலாநிதி க. இரகுபரன்**

பத்தொன்பதாம் நூற்றாண்டு முதல் நமது சூழலில் ஏற்பட்டு வந்த அரசியல், சமூக, பொருளாதார மாற்றங்களின் விளைவாக, உருவான இலக்கிய வகைகளாக நாவல் சிறுகதை என்னும் புனைகதைகள் – வசன ரூபமான இலக்கியங்கள் அமைகின்றன. ஆங்கிலக் கல்வி, அச்சுத் தொழில்நுட்பம், அதன் வழியான சஞ்சிகைகளின் உருவாக்கம் என்பன தமிழில் சிறுகதை என்னும் இலக்கிய வடிவம் தோன்றி வளர்வதற்குத் துணைசெய்த காரணிகள்.

கதை என்பது எல்லாக் காலத்திலும் எல்லாச் சமூகங்களிலும் காணப்படுவதே. ஆனால் சிறுகதை நவீன யுகத்தின் உருவாக்கம். அது உருவ ரீதியாகவும் உள்ளடக்க ரீதியாகவும் நவீனமானது. வெறுங்கதைகள் வெறுங் கட்டுக் கதைகளாகவே மதிப்பிடப் படுகின்றன. உண்மையை விட கதை சொல்பவரின் கற்பனைகளே அங்கே அதிகம் இடம்பெற்றன. ஆனால், புனைகதைகள் மனித வாழ்க்கையின் அடியாகத் தோன்றுபவை. அவற்றில், நடக்கமுடியாத கற்பனைகளுக்கு இடமில்லை, காணமுடியாத பாத்திரங்களுக்கு, பொருள்களுக்கு இடமில்லை. அவற்றுள் காணப்படுபவை எழுத்தாள னதும் வாசகனதும் அனுபவங்களுக்கு அப்பாற்படாதவை. சுருக்க மாகச் சொன்னால் அவை யதார்த்தமானவை.

புனைகதைகள் தமிழுக்கு அறிமுகமான காலத்தில் எழுதியவர்கள் இந்த யதார்த்தத்தை உரிய அளவில் கருத்தில் எடுக்கவில்லை. எனினும் கூடிய விரைவில் தமிழ்ப் புனைகதைகள் யதார்த்தத்தை நோக்கி நகரத் தொடங்கிவிட்டன. சமூகப் பிரச்சினைகள் இலக்கியத்தின் பேசுபொருளாயின. வறுமை, சுரண்டல், சீதனம், சாதி, வேலைவாய்ப்பின்மை முதலான சமூகப் பிரச்சினை களும் பாலியல், உளவியல் முதலானவை சார்ந்த தனிமனிதப் பிரச்சினைகளும் கதைகளில் தீவிரமாக எடுத்தாளப்பட்டன. எனினும் மட்டரகமான வாசகர்களைத் திருப்திப்படுத்தி, வாசகர் கூட்டத்தைப் பெருக்கிக் கொள்வதற்காகப் பாலியல் உணர்வுத் தூண்டல், வெற்று நகைச்சுவை, திடீர்த்திருப்பங்கள் மூலமான கவர்ச்சி முதலான வற்றையே நோக்கமாகக் கொண்ட மலினமான பொழுதுபோக்குக் கதைகளை எழுதியவர்களும் இல்லாமலில்லை. எனினும் தீவிர வாசகர்களும் விமர்சகர்களும் சமூக யதார்த்தத்தையும் கலை நுட்பத்தையுமே புனைகதைகளில் அனுபவிக்க விரும்பினார்கள்.

புனைகதையில் யதார்த்தம் தொடர்ந்தும் வலியுறுத்தப்பட்டு வந்த நிலையில் கதை எந்தப் பிராந்தியத்தைக் களமாகக் கொண்டதோ அந்தப் பிராந்தியத்து இயற்கைச் சூழ்நிலைகளை, சமூக உறவுகளை, தொழில் துறைகளைப் படிமமாகச் சித்திரிக்கும் பண்பு மேலோங்கியது. அந்த அந்தப் பிராந்தியங்கள் சார்ந்த கதை மாந்தர்கள் அவரவருக்குரிய அனுபவங்களோடும் நடையுடை பாவனையோடும் மொழியோடும் வார்க்கப்பட்டார்கள். இதன் காரணமாக இலக்கியத்தில் ஏற்புடைமை பெற்ற பேச்சுமொழி காலகதியில் புனைகதையாக்கத்தில் நுணுக்கமான கவனிப்புக்கு உள்ளானது. இத்தகைய போக்கின் வளர்ச்சி நிலையில் பிரதேச, வட்டார இலக்கியம் என்பது ஒரு கோட்பாடாக – இலக்கியக் கோசமாக – உருப்பெற்றது. ஒவ்வொரு பிரதேசத்திலும் வாழும் மக்களது பிரச்சினைகள் அவ்வப் பிரதேசத்தில் வாழும் எழுத்தாளர் களாலேயே வெளிப்படுத்தப்பட்டன.

காலம் சமுதாயத்தில் – குறிப்பாக ஈழத் தமிழ்ச் சமுதாயத்தில் மிகக் குறுகிய காலத்திலேயே விரைவான மாற்றங் களையும் உலகப் பொதுமையற்ற அனுபவங்களையும் காட்டிச் சென்றுள்ளது. நாட்டில் முனைப்புப் பெற்ற இன உணர்வுகளும் அவற்றின் விளைவான பிரச்சினைகளும் போர்களும் புலப் பெயர்வு களும் தமிழிலக்கியச் சூழலுக்குப் பொதுவான அனுபவங்கள் அல்ல. இலங்கைத் தமிழிலக்கியச் சூழலுக்கே சிறப்பான அனுபவங் களாகும். இவற்றால் போர்க்காலச் சிறுகதைகள் என்றும் புலம்பெயர் சிறுகதைகள் என்றும் வகைபாடுகள் உருவாகின.

பிரதேசச் சிறுகதைகள், போர்க்காலச் சிறுகதைகள், புலம்பெயர் சிறுகதைகள் என்னும் இவையோ இவை போன்றவையோ உலகப் பொதுமையான அனுபவங்களைத் தருவன அல்ல. குறைந்த பட்சம் தமிழ்ச் சூழலுக்குப் பொதுமையான அனுபவங்களாகவேனும் அமைவன அல்ல. ஆகையால் அவை வேறு வேறு பிரதேச வேறு வேறு கால வாசகர்களின் அனுபவங்களோடு இலகுவில் ஒன்றக் கூடியனவல்ல.

மனிதப் பொதுமையான பல பண்புகள் உண்டு. பிரச்சினைகள் உண்டு. எந்தப் பிராந்தியத்துக்கும் எந்த இனத்துக்கும் எந்தக் காலத்துக்கும் பொதுமையானவை. அத்தகையவற்றைப் பிரதிபலிக்கும் இலக்கியங்கள் உலகின் எந்தப் பாகத்திலிருக்கும் மனிதனுக்கும் எந்தக் காலத்திலிருக்கும் மனிதனுக்கும் உணர்வொருமைப்பாட்டை ஏற்படுத்த வல்லன.

டாக்டர் நௌஷாட் அவர்களின் ‘சொர்க்கபுரிச் சங்கதிகள்’ இவற்றுள் எந்த வகையில் அடங்குவன? இக்கதைகளில் வரும்

களங்கள் பல அன்னியமானவை (உ-ம்: கோவண தேசம், வெள்ளிக்குற்றி நாடு) பாத்திரங்கள் அன்னியமானவை அல்லது இன்ன இனம், இன்ன மதம் என்று இனங்காண முடியாதவை (உ-ம்: பிர்வா நப்லா, டாக்டர் யுக்ஸியி, ஸைமினா) மொழி கூட அன்னியமானதே. தற்காலத் தமிழ்ப் புனைகதைச் சூழலுக்கு உரியது அல்ல, செந்தமிழ்ப் பாங்கானது. ஆயினும் இச் சிறுகதைகளிற் கூறமுற்படும் விடயங்கள் அன்னியமானவை அல்ல. நமது பிராந்தியங்களுக்குச் சிறப்பானவையாகவும் உலகப் பொதுமையான வையுமான பல விடயங்கள் இவற்றிலே பேசப்படுகின்றன. ஆனால், புதுவிதமாகப் பேசப்படுகின்றன அல்லது மறைமுகமாகப் பேசப்படுகின்றன. சில கதைகளில் விலங்குகள் தான் கதாபாத்திரங் களாக வருகின்றன. ஆனால், அவை மனிதரின் குறியீடுகளாகவே கொள்ளத்தக்கன, ஜோர்ஜ் ஓர்வெல் (George Orwell) எழுதிய 'விலங்குப் பண்ணை'யில் வரும் விலங்குகள் போல.

பண்டைய காலத்தில் தமிழில் வழங்கிய உரைநடை வகைகளைப் பகுத்து நோக்கிய தொல்காப்பியர் 'பொருண் மரபில்லாப் பொய்ம்மொழி' என்ற ஒரு வகையைக் குறிப்பிடுவார். அதற்கு விளக்கம் அளித்த உரையாசிரியர்கள் 'உண்மையில்லாப் பொய்க்கதை, புனைகதை' என்றும் 'யானையும் குருவியும் தம்முள் நட்பாடிப் பேசிக்கொள்வது போலாகும்' என்றும் விளக்கம் தருவார்கள். தொல்காப்பியர் குறிப்பிடும் மற்றொரு வகை உரைநடை 'பொருளொடு புணர்ந்த நகைமொழி' என்பதாகும். அதற்கு 'உண்மை கலந்த வேடிக்கைப் பேச்சு' என்று விளக்கம் தரப்படும். பஞ்சதந்திரம் முதலான கதைகளிலும் விலங்குகளே பாத்திரங்கள். விலங்குகளின் நடத்தைகள் மூலம் சிற்சில நீதிகள், புத்திமதிகள் அக்கதைகளில் எடுத்துரைக்கப்பட்டன. 'சொர்க்கபுரிச் சங்கதிக'ளிலும் பெரும்பாலும் விலங்குகளே வந்து பேசிச் செல்கின்றன, வரும் மனிதர்களும் நமக்குச் பரிச்சயமில்லாதவர்களாகவே வந்து செல்கிறார்கள். ஆனால், இக்கதைகள் பஞ்சதந்திரம் போல நீதி போதனை செய்யவில்லை. சமூக யதார்த்தத்தை உருச்சிதைத்துத் தருகின்றன. அதாவது சமூக யதார்த்தம் மறைமுகமாக எடுத்துரைக் கப்படுகின்றது. நாம் வாழும் காலத்தின் கோலமாகவே இந்த எடுத்துரைப்பு உத்தியைக் கொள்ள வேண்டும். உண்மையை வெளிப்படையாக – நேருக்கு நேராக – திராணியோடு எடுத்துரைத்து விட்டு உயிர் வாழத்தக்க சமூக சமத்துவமும் நீதியும் உள்ள ஜனநாயகச் சூழல் அற்றுப்போன ஒரு சூழலில் வாழும் எழுத்தாள ருக்கு இது வாய்ப்பான ஓர் உத்தியாகி விட்டது.

அண்மைக்காலத்து ஈழத்து எழுத்தாளர்கள் சிலர் இத்தகைய உத்திகளை மிக வெற்றிகரமாகக் கையாண்டு, வாசிப்புச் சுவாரசியம்

குன்றாத வகையில் கனதியான, கலாபூர்வமான பல சிறுகதைகளைத் தந்திருக்கிறார்கள். டாக்டர் நௌஷாட் அவர்களிடமும் தரமான இலக்கியப் படைப்பாளி ஒருவரிடம் இருக்க வேண்டிய இலாகவமான மொழியாற்றல் தாராளமாகவே உண்டு, சிந்தனைத் தெளிவும் உண்டு, சமூக உணர்வும் உண்டு. அதனால் அவரது கதைகளைக் கருத்தூன்றி வாசிக்கிறோம். நௌஷாட் அவர்கள் தனித்துவமான ஆற்றலுள்ள எழுத்தாளர் என்பதில் ஐயமில்லை. அவரது தனிப்பட்ட வாழ்க்கையும் எழுத்துலக வாழ்க்கையும் மேலும் சிறப்புற வாழ்த்துக்கள்.

**முதுநிலை விரிவுரையாளர், மொழித்துறை,**
**தென்கிழக்குப் பல்கலைக்கழகம்,**
**ஒலுவில்.**

# சிந்தனையின் கலகக் குரலாக ஒரு கதைத் தொகுதி

**மன்சூர் ஏ. காதிர்**

தமிழ் இலக்கியப் பரப்பில் பின்நவீனத்துவம் பேசுபொருளாக மாறிய காலக்கட்டமான 1985இற்குப் பின்னர் எம்.எம். நௌஷாத் என்ற கதைசொல்லி இளைஞர் நவீனத்தவச் செல்நெறியின் பிந்திய பாதிப்புக்களுடன் இலக்கிய உலகுக்கு அறிமுகமானார்.

அக்காலகட்டத்தில் ஈழத்து இலக்கிய உலகை தனது வசீகரமான எழுத்தோவியங்களால் கட்டுக்குள் வைத்திருந்த வியூகம் இலக்கிய அமைப்பினரால் வெளியிடப்பட்ட வியூகம் என்ற சஞ்சிகையில் இவரின் கதைகளும் பிரசுரம் பெறும் அளவுக்கு ஒரு கனதி மிக்க படைப்பாளியாக இவர் கணிக்கப்பட்டார். அதற்கு முன்னரும் பின்னரும் இவரின் சில கதைகள் வாரவெளியீடுகளில் இடம்பெற்றன.

எனினும் வாண்மை மிகு வைத்தியர் என்ற பட்டத்தைப் பெற்றதன் பின்னர் இலக்கிய உலகுடன் தொடர்பற்ற ஒரு தவ நிலையில் சில காலங்கள் ஒதுங்கியிருந்தார். இந்த அந்நியத் தன்மை அவருக்கு இயல்பாவே அமைந்தது அல்ல என்பதை நிரூபணமாக்க தற்போது அதிரடியாக ஒரு சிறுகதைத் தொகுதியை சொர்க்கபுரிச் சங்கதி எனும் பெயரில் கம்பீரத்துடன் வெளியிட டாக்டர் நௌஷாத் முன்வந்துள்ளார். பின்நவீனத்துவம் எனும் மெய்யியல் கோட்பாடு காலாவதியாகிப் போய்க்கொண்டிருக்கும் ஒரு காலகட்டத்தில், சமகால தமிழிலக்கிய செல்நெறிக்கு முற்றிலும் புத்தம் புதியதான கதாஉத்தியுடன் இத்தொகுதி வெளிவருகின்றது.

சூத்திரங்களுக்குள் எல்லைப்படுத்தி விமர்சனத்தில் ஈடுபட்ட இலக்கிய விமர்சகர்கள் மேற்கத்தைய தத்துவ ஞானத்தின் விழுதுகளில் தொங்கிக்கொண்டும் ஐரோப்பிய இலக்கியங்களின் வகைமாதிரிகளை முன்னிறுத்தியுமே பெரும்பாலும் இயங்கி வந்தனர். பின்நவீனத் துவத்தின் அடுத்த பரிணாமத்தைப்பற்றி மூளையை குழப்பிக்கொண் டிருக்கும் அந்த இலக்கிய கோட்பாட்டாளர்களை மேலும் குழப்பத்துக்கு உள்ளாக்கும் புத்தம் புதிய பரிசோதனை முயற்சியில் இங்கு நௌஷாத் இறங்கியுள்ளார். மலையாள இலக்கிய உலகு சற்று முன்னரே இத்தகைய முயற்சியில் இறங்கி விட்டது என்ற தகவலும் இங்கு குறித்து வைக்கத்தக்கதாகும். இந்த பரிசோதனை முயற்சியானது எதிர்காலத்தில் சிறப்பாக தமிழ் இலக்கிய உலகின்

இயங்கியலில் பாரிய சர்ச்சைகளையும் கலகங்களையும் தோற்று விக்கவே செய்யும்.

நவீனத்துவ இலக்கியச் செல்நெறியின் பிரதான அம்சமான யதார்த்த வாதத்தையும் அதனைப் புறந்தள்ளி எழுந்த பின்நவீனத்துவ அம்சங் களையும் ஒட்டுமொத்தமாக நிராகரித்து புதியதோர் கலகக் குரலுடன் இத்தொகுதியானது இத்தால் தலைநிமிர்த்துகின்றது.

இந்த பரிசோதனையின் பெறுபேறானது ஐரோப்பிய இலக்கிய சிந்தனாவாதத்தைப் புறந்தள்ளிக்கொண்டு புத்தம் புதிய இலக்கியக் கோட்பாடுகளை தமிழ் இலக்கியப்பரப்பில் தோற்றுவிக்கத்தக்கதாக அமையப் போகின்றது என எனக்குப்படுகின்றது. அத்தகைய ஒரு வித்தியாசமான கலகக் குரலின் சொந்தக்காரன் எனக்கும் நண்பன் என்ற வகையில் நான் நிரம்பவும் மகிழ்ச்சியடைகின்றேன்.

ஒரு காலத்தைய சம்மாந்துறையின் தீவிர கல்வி மறுமலர்ச்சியை உண்டாக்கிய அதிபர் யூ.எம். முஸ்தபா. ஜெமீலா ரீச்சர் ஆகியோரின் மூத்த புதல்வாரன டாக்டர் நௌஷாத் அவர்களுக்கு என் மனம் நிறைந்த வாழ்த்துக்கள்.

**'கதீஜா'**
**சின்ன ஆலிம் சதுக்கம்**
**சம்மாந்துறை—09.**

# இன்றைய எதிர்கால சந்ததியினரின் தேடல்களுக்கு விழுமிய ஒரு வெளியீடு

**கலாபூஷணம் மாறன் யூ.ஸெயின்**

சம்மாந்துறை என்னும் மண்பதி கிராமியக் கவிப் பாடல் இலக்கியத் துறையில் பாரம்பரிய சுவடுகள் பூத்த ஒரு பிரதேசமாகும். கலைத் துறைகளிலும் கூத்தாட்டம், சீனம், சிலம்படி, இசைவாத்தியம், நாடகம், கோலாட்டம்... போன்றவற்றின் அசைவுகளும் அடையாளங் களும் அவ்வப்போது ஒளிர்ந்து கொண்டுமிருக்கின்றன.

ஆக்கக் கட்டுரைகள், கவிதைகள்.... வடிவிலான இலக்கியம் படைப்புக்களில் கூடுதலான ஆர்வங்களும் ஆற்றல்களும் மிக்க வர்கள் இன்னும் ஒளிர்ந்து பிரகாசித்துக் கொண்டு இலங்குகின்றனர். இவர்களது ஆக்கங்களும் படைப்புக்களும் அவ்வப்போது தொகுதி களாகவும், நூல்களாகவும், தொகுப்புக்களாகவும் ஆவணங்களாக வெளிவந்து கொண்டிருப்பதையும் அறியலாம். இருந்தாலும் சிறுகதை வடிவிலான இலக்கியப் படைப்புக்கள் மிகவும் அரிதாகவே இருக்கின்றன.

இப்பிரதேசத்தில் ஒரு சில சிறுகதை எழுத்தாளர்கள் இல்லாமலும் இல்லை இவர்களது சிறுகதைகளை அவ்வப்போது பத்திரிகை களிலும், சிறப்பு மலர்களிலும் பிரசுரமாகி வெளிவந்துமிருக்கின்றன. இருந்தாலும் ஒருவரது தொகுதியாதல் வெளிவந்ததாக இல்லை

இந்த வரட்சியான காலகட்டத்திலேதான் இம்மண்பதியில் பிறந்து பல துறைகளிலும் ஒளிர்ந்து கொண்டிருக்கின்ற அரச வைத்திய அதிகாரி எழுத்தாளர் எம்.எம்.நௌஷாத் அவர்களின் சிறுகதை இலக்கியம் படைத்து வந்த ஆற்றலையும் பயணத்தையும் சற்று சிந்திக்க வேண்டி யிருக்கின்றது.

இவர் இளமைக்காலத்திலிருந்தே அவ்வப்போது பல சிறுகதைகளை எழுதி வந்திருக்கின்றார். இவரது சிறுகதைகள் பல பத்திரிகை களிலும், சஞ்சிகைகளிலும், சிறப்பு மலர்களிலும் பிரசுரமாகி இருக் கின்றன. அகில இலங்கை மட்டத்தில் இடம்பெற்ற சிறுகதைப் போட்டியில் முதல் நிலைக்கான பரிசையும் பெற்றுமிருக்கின்றன.

இவர் அரச வைத்திய அதிகாரியாகப் பதவியேற்று பணிகளை மேற்கொண்டு வருகின்ற அவகாசங்கள் பற்றாக்குறையான காலகட் டத்திலும்கூட சிறுகதைகள் படைக்கும் பயணத்தில் இதயம் சோர்ந் ததாக இல்லை. இவர் அவ்வப்போது எழுதிவந்த பெரும்பாலான சிறுகதைகள் இவரது கோவைகளில் தான் இலங்கின.

இவரது காத்திரமான சிறுகதைகளின் இலக்குகளையும் போக்கு களையும் யதார்த்தங்களையும் தெளிந்த இலக்கிய நேசங்கள் அத்தனை சிறுகதைகளையும் ஒரு தொகுதியாக வெளியிட வேண்டும் என்று அவ்வப்போது பல சந்தர்ப்பங்களில் வேண்டியிருந்தனர் இப்போதுததான் அந்த நேசங்களின் வேண்டுதல்கள் உறைத்து இருக் கின்றன. அதேநேரம் இது தொடர்பான தகவல்களை நாமும் அறிந்தே இருந்தோம். இத்தொகுதியை வெளியிட்டாக வேண்டும் என்கின்ற ஆதங்கம் எமக்குள்ளும் இழைந்தது.

எத்தனையோ பிரபல தமிழ்ச்சிறுகதை எழுத்தாளர்களின் சிறுகதைகளை நாமும் படித்தே இருக்கிறோம். இவர்களது இலக்குகள், போக்குகள் இங்கிதமான சொல்லாடல்கள் நடைகள் ஒப்புவிக்கும் உத்திகள்.... என்பவற்றை அறிந்தும் அனுபவித்தும் இருக்கிறோம்.

இந்தவிதமான சிறுகதை இலக்கியப் பிரவாகத்துள் எமது சிறுகதை எழுத்தாளர் எம்.எம்.நௌஷாத் அவர்களது சிறுகதைகளின் வடிவங்கள் வித்தியாசமான புதிய ஒரு உத்தியை உணர்த்துவனவாக இழைகின்றன.

இவரது சிறுகதைகளின் தலைப்புக்கள், ஆரம்பங்கள், ஓட்டங்கள், வடிவங்கள், ஒப்புவித்தல்கள்.... எல்லாமே சிந்தனைக்கு விருந்தாக இலங்குகின்றன.

இவர் சம்மாந்துறையில் ஒளிர்கின்ற ஒரு சிறுகதை எழுத்தாளர் என்பதைவிட தமிழ்கூறும் நல்லுலகின் சிறுகதை இலக்கியப் பரம்பலுக்கே சொந்தமான ஒருவர் என்றால் மிகை இல்லை.

இவற்றை எல்லாம் சிந்தனைக்கு எடுத்துத்தான் இவரது சிறுகதை களைக் கொண்ட ***சொர்க்கபுரிச் சங்கதி*** என்னும் பெயரிலான இச்சிறுகதைத் தொகுதியை எமது தேசிய கலை இலக்கிய தேனகம் தனது ஏழாவது வெளியீடாக வெளியிட்டு வைக்கக் களத்தில் இறங்கியது.

முப்பத்து மூன்று சிறுகதைகளைக் கொண்ட கனதியான ஒரு தொகுதி தான் என்றாலும் ஒவ்வொரு கதைகளுமே சிந்திக்க வைக்கும் முத்துக்கள்.

சம்மாந்துறை எனும் மண்பதியின் இலக்கியப் பரம்பலில் ஒளிர்ந்த இந்தச் சிறுகதை இலக்கிய ஆவணத்தை எமது தமிழ் கூறும் நல்லுலகின் இன்றைய எதிர்கால சந்ததியினரின் தேடல்களுக்குப் பயன்பட எமது இலக்கியத் தேனகம் வெளியீடு செய்து சமர்ப்பணம் செய்வதில் ஆத்மதிருப்தி அடைகிறது.

**தலைவர்,**
**தேசிய கலை இலக்கிய தேனகம்,**
**சம்மாந்துறை.**

# கதைக்கு முன் ஓவியங்கள்

**சீ.ருத்ரா**

ஒளியின் படிவு பொருட்களின் தோற்றத்தை மாற்றுகிறது. உண்மையில் பொருட்கள் அப்படியே இருப்பதில்லை. நமது பார்வைக்கோணம் மாற்றப்படும் போது பார்க்கப்படும் பொருட்களும் மாறுகிறது. கண் ஒளி மாயப் பிரச்சினை பொருள் பற்றிய பார்வையில் நிச்சயமின்மையைத் தோற்றுவிக்கின்றது.

படைப்பாளியின் உலகும், வாசகனின் உலகும், வெவ்வேறு வேகங்களில் இடைவெளிகளுடன் நிகழ்கின்ற இயக்கம் வேறு, படைப்பாளியின் எண்ணங்கள், கற்பனைகள் படைப்புகளிடையே நிரப்பமுடியாத இடைவெளி இருந்து கொண்டே இருக்கின்றது. இதனால் பொருள்படுத்திக் கொள்ளும் அர்த்தங்கள் நிலையானதல்ல. மாறிக்கொண்டே இருப்பதனால் நிறங்களும் நிலையான வடிவம் நோக்கி தங்களுக்குள் தாங்களே கரைந்து கொண்டிருக்கின்றன.

நீரில் மூழ்கும் பொருட்களின் கனஅளவிற்குச் சமமான நீர் இடப்பெயர்ச்சியாகின்றது உண்மையெனின் வெளியில் அமிழ்த்தப்படும் பொருள் மூழ்கிஇருக்கும் போது அப்பொருளுக்குச் சமமாக வெளியில் இடப்பெயர்ச்சியாக இந்த ஓவியங்களய் பார்வையாளனின், வாசகனின், படைப்பாளியின் தரிசன வெளியில்...

கதைகளின் வாசனையில் மட்டும் காணாத ஒன்றில் கரைந்து போகும் மனம், நிறங்களின் சலனங்களில் நிலைத்திடத்தான் நேரம் ஏது? தொடக்கம் என்பதே குழப்பத்தில் இருந்தே......

**உடையார் வீதி,**
**கல்முனை–02.**

# கதைகள்.....